ஸ்ரீமத் யாமுநமுநயே நம:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# கீதார்த்த ஸங்க்ரஹம்

## கீதாஸாரம்:

1) ஸ்வதர்மஜ்ஞாந வைராக்ய
ஸாத்ய பக்த்யேக கோசர:
நாராயண: பரம்ப்ரஹ்ம
கீதாஶாஸ்த்ரே ஸமீரித:

*ஸ்வதர்மஜ்ஞாந வைராக்ய ஸாத்ய பக்த்யேக கோசர:* - தன் (வர்ணாச்ரம) தர்மரூபமாயிருக்கும் கர்மயோகத்தாலும், ஞானயோகத்தாலும், இதரவிஷயங்களில் பற்றின்மையாலும் உண்டாகும் பக்தியொன்றுக்கே விஷயமாகுமவனுய் *பரம்ப்ரஹ்ம* - பரப்ரஹ்மமான, *நாராயண:* - நாராயணன், *கீதாஶாஸ்த்ரே* - கீதையாகிற ஶாஸ்திரத்தில், *ஸமீரித*: - அறிவிக்கப்பட்டுள்ளான்.

## பூர்வஷட்கம்:

2) ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே
யோகலக்ஷ்யே ஸுஸம்ஸ்க்ருதே
ஆத்மாநுபூதி ஸித்த்யர்த்தே
பூர்வஷட்கேந சோதிதே

*ஸுஸம்ஸ்க்ருதே* - (சேஷத்வஜ்ஞாநம், இதரவிஷயங்களில் பற்றின்மை முதலான புத்திவிஷேஷங்களாலே) நன்கு அலங்கரிக்கப்பட்ட, *ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே* - ஞானயோகமும், கர்மயோகமும், *யோகலக்ஷ்யே* - (ஆத்மஸாக்ஷாத்காரமாகிற) யோகத்தை அடையும் பொருட்டு, *ஆத்மாநுபூதி ஸித்த்யர்த்தே* - (அதற்குப்பின்) ஆத்மாநுபவத்தை அடையும் பொருட்டும், *பூர்வஷட்கேந* - (கீதையின்) முதல் ஆறு அத்தியாயங்களாலும், *சோதிதே* - விதிக்கப்பட்டன.

## மத்யமஷட்கம்:

3) மத்யமே பகவத்தத்த்வ
யாதாத்ம்யாவாப்தி ஸித்தயே
ஜ்ஞாநகர்மாபி நிர்வர்த்யோ
பக்தியோக:ப்ரகீர்த்தித:

*மத்யமே* - நடு ஆறு அத்தியாயங்களில், *பகவத் தத்வ யாதாத்ம்ய அவாப்தி ஸித்தயே* - பகவானுகிற பரதத்துவத்தின் உண்மையான அநுபவம் உண்டாவதன் பொருட்டு, *ஜ்ஞாந கர்ம அபிநிர்வர்த்ய:* -ஜ்ஞாநத்தோடு கூடிய கர்ம யோகத்தாலே உண்டாகும், *பக்தியோக:* - பக்தியோகம், *ப்ரகீர்த்தித:* - சொல்லப்படுகிறது.

## அந்திமஷட்கம்:

4) ப்ரதாந புருஷவ்யக்த
ஸர்வேஶ்வர விவேசநம்
கர்ம தீர் பக்திரித்யாதி:
பூர்வஶேஷோந்திமோதித:

*ப்ரதாந புருஷவ்யக்த ஸர்வேஶ்வர விவேசநம்* - ஸூக்ஷமமான மூலப்ரக்ருதி, ஜீவன்,ஸ்தூலமான அசேதனம், ஸர்வேஶ்வரன் ஆகியவற்றைப் பற்றிய விளக்கமும், *கர்ம:* - கர்மயோகமும், *தீ:* -ஜ்ஞாநயோகமும், *பக்தி:* - பக்தியோகமும், *இத்யாதி:* - இவற்றை அநுஷ்டிக்கும் முறை முதலானவையும், (ஆகிய இவற்றில்) *பூர்வஶேஷ:* - முன் அத்தியாயங்களில் சொல்லாமல் விடப்பட்டவை, *அந்திமோதித:* - கடைசி ஆறு அத்தியாயங்களிலும் சொல்லப்பட்டன.

### 1 - அர்ஜுன விஷாத யோகம்:

5) அஸ்தாநஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியாகுலம்
பார்த்தம்ப்ரபந்நமுத்திஶ்ய ஶாஸ்த்ராவதரணம்க்ருதம்

*அஸ்தாந ஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியா* - தகாத பந்துக்களிடம் பற்றினுலும், கருணையினுலும், உண்டான தர்மத்தில் அதர்மபுத்தியாலே, *ஆகுலம்* - கலங்கி நிற்பவனுய், *ப்ரபந்நம்* - சரணமடைந்தவனுன, *பார்த்தம் உத்திஶ்ய* - அர்ஜுனனைக் குறித்து, *ஶாஸ்த்ராவதரணம்க்ருதம்* - கீதாசாஸ்த்ரம் (முதலத்தியாயத்தில்) சொல்லப்பட்டது.

### 2 - ஸாங்க்ய யோகம்:

6) நித்யாத்மாஸங்ககர்மேஹாகோசரா ஸாங்க்யயோகதீ:
த்விதீயேஸ்திததீலக்ஷாப்ரோக்தா தந்மோஹஶாந்தயே

நித்ய ஆத்ம அஸங்க கர்ம ஈஹா கோசரா - நித்யமான ஆத்மதத்துவமென்ன, பற்றற்ற கர்மாநுஷ்டானமென்ன இவற்றை விஷயமாகக் கொண்டதாய்,ஸ்திததீலக்ஷா -ஸ்திதப்ரஜ்ஞ தசையை லக்ஷியமாகக்

கொண்டதான, ஸாங்க்யயோகதீ - ஆத்மஜ்ஞானமும், கர்மயோகத்தைப் பற்றிய அறிவும், தந்மோஹஶாந்தயே - அர்ஜுனனின் மயக்கம் நீங்குவதற்காக,த்விதீயே - இரண்டாம் அத்தியாயத்தில்,ப்ரோக்தா - உபதேசிக்கப்படுகிறது.

### 3 - கர்ம யோகம்:

7) அஸக்த்யா லோகரக்ஷாயை குணேஷ்வாரோப்ய கர்த்ருதாம்
ஸர்வேஶ்வரே வாந்யஸ்யோக்தாத்ருதீயே கர்மகார்யதா

*லோகரக்ஷாயை* - (ஜ்ஞாநயோகத்தில் அதிகாரமில்லாத) ஜனங்களைக் காப்பதற்காக, *குணேஷு* - ஸத்வரஜஸ்தமோ குணங்களில், *கர்த்ருதாம் ஆரோப்ய* - தன்னிடமுள்ள கர்த்ருத்வத்தை அநுஸந்தித்து, *ஸர்வேஶ்வரே வாந்யஸ்ய* - அந்த குணங்கள் முதலான அனைத்துக்கும் ஈஶ்வரனான பகவானிடத்தில் அக்கர்த்ருத்வத்தைச் சேர்த்துவிட்டு, *அஸக்த்யா* - மோக்ஷம் தவிர்ந்த மற்ற பலன்களில் பற்றில்லாமல், *கர்மகார்யதா* - கர்மங்களைச் செய்யவேண்டுமென்பது, *த்ருதீயே உக்தா* - மூன்றுமத்தியாயத்தில் கூறப்பட்டது.

### 4 -ஜ்ஞான யோகம்:

8) ப்ரஸங்காத்ஸ்வஸ்வபாவோக்தி: கர்மணோகர்மதாஸ்ய ச
பேதா:ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்தாத்யாய உச்யதே

*சதுர்த்தாத்யாயே* - நான்காமத்தியாயத்தில், *கர்மண: அகர்மதா உச்யதே* - (ஞானமடங்கிய) கர்மயோகம் ஞானயோகமாகவேயிருத்தல் சொல்லப்படுகிறது; *அஸ்ய பேதா: ச (உச்யதே)* - கர்மயோகத்தின் (ஸ்வரூபமும்) பிரிவுகளும் சொல்லப்படுகின்றன; *ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் (உச்யதே)* - (கர்மயோகத்தில் அடங்கிய) ஞானபாகத்தின் பெருமையும் கூறப்படுகிறது; *ப்ரஸங்காத்* - (தான் சொல்லுமர்த்தம் ப்ராமாணிகமானது என்று நிரூபிக்கவேண்டிய) ப்ரஸங்கம் ஏற்பட்டபடியாலே, *ஸ்வஸ்வபாவோக்தி*: - (அவதார தசையிலும் மாறாத) தன் தன்மையைப் பற்றிய பேச்சும் (முதலில்) உள்ளது.

### 5 - கர்மஸந்யாஸ யோகம்:

9) கர்மயோகஸ்ய ஸௌகர்யம் ஶைக்ர்யம் காஶ்சந தத்விதா:
ப்ரஹ்மஜ்ஞாநப்ரகாரஶ்ச பஞ்சமாத்யாய உச்யதே

*கர்மயோகஸ்ய* - கர்மயோகத்தினுடைய, *ஸௌகர்யம்* - செயற்கெளிய தன்மையும், *ஶைக்ர்யம்* - விரைவில் பலனளிக்கும் தன்மையும், *காஶ்சந தத்விதா:* - அதற்குறுப்பான சில அங்கங்களும், *ப்ரஹ்மஜ்ஞாநப்ரகார: ச* -

ஶூத்தாத்மாக்களைக் ஸமமாகக் காண்கைக்குறுப்பான நிலையும், *பஞ்சமாத்யாயே* - ஐந்தாமத்தியாயத்தில், *உச்யதே* - கூறப்படுகிறது.

## 6 - அத்யாத்ம யோகம்:

10) யோகாப்யாஸவிதிர் யோகீ சதுர்த்தா யோகஸாதநம்
யோகஸித்தி:ஸ்வயோகஸ்ய பாரம்யம் ஷஷ்ட்டே உச்யதே

*யோகாப்யாஸவிதி:* - (ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற) யோகத்தைப் பழகும் முறையும், *சதுர்த்தா யோகீ* - நாலுவகைப்பட்ட யோகிகளும், *யோகஸாதநம்* - (முற்கூறிய) யோகத்திற்கு ஸாதநமாகிய அப்யாஸம், வைராக்யம் முதலானவையும், *யோகஸித்தி:* - (தொடங்கிய) யோகம் (இடையில் தடைபட்டாலும் காலக்ரமத்தில்) ஸித்தியடையும் என்பதும், *ஸ்வயோகஸ்ய பாரம்யம்* - தன் விஷயமான பக்தியோகத்தின் உயர்வும், *ஷஷ்ட்டே* - ஆறுமத்தியாயத்தில், *உச்யதே* - கூறப்படுகிறது.

## 7 - விஜ்ஞான யோகம்:

11) ஸ்வயாதாத்ம்யம்ப்ரக்ருத்யாஸ்ய திரோதி: ஶரணாகதி:
பக்தபேத:ப்ரபுத்தஸ்யஶ்ரைஷ்ட்யம் ஸப்தம உச்யதே

*ஸப்தமே* - ஏழாவது அத்தியாயத்தில், *ஸ்வயாதாத்ம்யம்* - (உபாஸிக்கப்படும்) பரமபுருஷனுடைய தன்னைப் பற்றிய உண்மைநிலையும், *ப்ரக்ருத்யா* - மூலப்ரக்ருதியினாலே, *அஸ்யதிரோதி:* - இந்நிலை (ஜீவனுக்கு) மறைக்கப்படுவதும், *ஶரணாகதி:* - (அம்மறைவைப் போக்கடிக்கும்) ஶரணாகதியும், *பக்தபேத:* - உபாஸகர்களில் (நாலு) வகையும், *ப்ரபுத்தஸ்ய ஶ்ரைஷ்ட்யம்* - (அந்நால்வரில்) ஞானியின் சிறப்பும், *உச்யதே* - கூறப்படுகிறது.

## 8 - அப்யாஸ யோகம்:

12) ஐஶ்வர்யாக்ஷரயாதாத்ம்ய பகவச்சரணார்த்திநாம்
வேத்யோபாதேயபாவாநாம் அஷ்டமே பேத உச்யதே

*ஐஶ்வர்ய அக்ஷர யாதாத்ம்ய பகவச்சரணார்த்திநாம்* - (1) ஐஶ்வர்யார்த்தி, (2)ப்ரக்ருதியினின்று நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை அநுபவிக்க விரும்பும் கைவல்யார்த்தி, (3) பகவானுடைய திருவடித்தாமரையைப் பெறவிரும்பும் ஞானி ஆகிய மூவர்க்கும், *வேத்யோபாதேயபாவாநாம்* - அறியவேண்டும் அர்த்த விஷேஷங்கள், கைக்கொள்ள (அநுஷ்டிக்க) வேண்டியவை ஆகியவற்றின், *பேத:* - வேறுபாடு, *அஷ்டமே* - எட்டாம் அத்தியாயத்தில், *உச்யதே* - சொல்லப்படுகிறது.

### 9 - ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்:

13) ஸ்வமாஹாத்ம்யம் மநுஷ்யத்வே பரத்வம் ச மஹாத்மநாம்
விஶேஷோ நவமே யோகோ பக்திரூப:ப்ரகீர்த்தித:

*ஸ்வமாஹாத்ம்யம்* - தன்னுடைய பெருமை, *மநுஷ்யத்வே பரத்வம்* - மனிதனுய் அவதரிக்கும்போதும் மேன்மையையுடைத்தாயிருக்கை, *மஹாத்மநாம் விஶேஷ:* -ஜ்ஞாநிகளுக்குள்ள சிறப்பு, (ஆகியவற்ருேடு கூடிய), *பக்திரூப: யோக: ச* - பக்தியோகம் எனப்படும் உபாஸனம், *நவமே* - ஒன்பதாவது அத்தியாயத்தில், *ப்ரகீர்த்தித:* - நன்ருகச் சொல்லப்பட்டது.

### 10 - விபூதி யோகம்:

14) ஸ்வகல்யாணகுணாநந்த்யக்ருத்ஸ்நஸ்வாதீநதாமதி:
பக்த்யுத்பத்திவிவ்ருத்த்யர்த்தா விஸ்தீர்ணா தஶமோதிதா

*பக்த்யுத்பத்தி விவ்ருத்த்யர்த்தா* - ஸாதனபக்தி உண்டாகி வளர்வதன் பொருட்டு, *ஸ்வ கல்யாணகுண அநந்த்ய க்ருத்ஸ்ந ஸ்வாதீநதா மதி:* - தனது கல்யாணகுணங்களின் அளவின்மை பற்றியும், அனைத்தும் தனக்கு அதீனமாயிருப்பது பற்றியும் உள்ள அறிவு, *விஸ்தீர்ணா* - விரிவாக, *தஶமோதிதா* - பத்தாமத்தியாயத்தில் சொல்லப்பட்டது.

### 11 - விஶ்வரூப தர்சனம்:

15) ஏகாதஶேஸ்வயாதாத்ம்யஸாக்ஷாத்காராவலோகநம்
தத்தமுக்தம் விதிப்ராப்த்யோர் பக்த்யேகோபாயதாததா

*ஏகாதஶே* - பதினோராமத்தியாயத்தில், *ஸ்வயாதாத்ம்ய ஸாக்ஷாத்கார அவலோகநம்* - தன்னை உள்ளபடி காண்பதற்குரிய திவ்யமான கண், *தத்தம் உக்தம்* - (அர்ஜுனனுக்குக் கண்ணனால்) கொடுக்கப்பட்டதெனச் சொல்லப்பட்டது; *ததா* - அவ்வண்ணமே, *விதிப்ராப்த்யோ* - (பரம்பொருளை) அறிவது, (காண்பது), அடைவது ஆகியவை, *பக்த்யேகோபாயதா* - பக்தியொன்றையே காரணமாகக் கொண்டவை (என்றும்), *உக்தம்* - சொல்லப்பட்டது.

### 12 - பக்தியோகம்:

16) பக்தே:ஶ்ரைஷ்ட்யமுபாயோக்திரஶக்தஸ்யாத்ம நிஷ்டதா
தத்ப்ரகாராஸ்த்வதிப்ரீதிர் பக்தேத்வாதஶ உச்யதே

*பக்தே:ஶ்ரைஷ்ட்யம்* - (ஆத்மோபாஸனத்தைக் காட்டிலும்) பகவதுபாஸனமாகிற பக்தியின் சிறப்பும், *உபாயோக்தி:* - அந்த பக்திக்கு உபாயத்தைத் தெரிவித்தலும், *அஶக்தஸ்ய* - பக்தியில்

ஶக்தியில்லாதவனுக்கு, *ஆத்மநிஷ்டதா* - ஆத்மோபாஸனமும், *தத்ப்ரகாரா:* - கர்மயோகம் முதலானவற்றுக்கு வேண்டியவைகளான குணங்களின் வகைகளும், *பக்தே அதிப்ரீதி: து* - தன் பக்தனிடம் மிகுந்தப்ரீதியும், *த்வாதஶே* - பன்னிரண்டாமத்தியாயத்தில், *உச்யதே* - கூறப்படுகிறது.

### 13 - க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்:

17) தேஹஸ்வரூபமாத்மாப்திஹேது ஆத்மவிஶோதநம்
பந்தஹேதுர்விவேகஶ்சத்ரயோதஶ உதீர்யதே

*தேஹஸ்வரூபம்* - தேஹத்தின்ஸ்வரூபமும், *ஆத்மாப்திஹேது:* - ஜீவாத்மஸ்வரூபத்தை அடைவதற்கு உபாயமும், *ஆத்மவிஶோதநம்* - ஆத்மாவை ஆராய்ந்தறிதலும், *பந்தஹேது:* - (ஆத்மாவுக்கு அசித்தோடு) தொடர்பு ஏற்படுவதற்குக் காரணமும், *விவேக: ச* - (ஆத்மாவை அசித்திலிருந்து) பிரித்தநுஸந்திக்கும் முறையும், *த்ரயோதஶே* - பதிமூன்றுவது அத்தியாயத்தில், *உதீர்யதே* - சொல்லப்படுகிறது.

### 14 - குணத்ரய விபாகயோகம்:

18) குணபந்தவிதா தேஷாம் கர்த்ருத்வம் தந்நிவர்த்தநம்
கதித்ரயஸ்வமூலத்வம் சதுர்த்தஶ உதீர்யதே

*குணபந்தவிதா* - (ஸத்வம் முதலான மூன்று குணங்கள்) ஸம்ஸாரபந்தத்துக்குக் காரணமாகும் முறையும், *தேஷாம் கர்த்ருத்வம்* - அந்த குணங்கள் செயலுக்குக் காரணமாயிருக்கும் தன்மையும், *தந்நிவர்த்தநம்* - அந்த குணங்களை நீக்கும் முறையும், *கதித்ரயஸ்வமூலத்வம்* - (சிறந்த ஐஶ்வர்யம், கைவல்யம், பகவத்ப்ராப்தி என்னும்) மூன்று ப்ராப்யங்களும் தன்னிடமிருந்தே கிடைக்கின்றன என்பதும், *சதுர்த்தஶே* - (கீதையின்) பதினாலாமத்தியாயத்தில், *உதீர்யதே* - சொல்லப்படுகிறது.

### 15 - புருஷோத்தம யோகம்:

19) அசிந்மிஶ்ராத்விஶுத்தாச்ச சேதநாத் புருஷோத்தம:
வ்யாபநாத்பரணாத்ஸ்வாம்யாத் அந்ய: பஞ்சதஶோதித:

*அசிந்மிஶ்ராத் (சேதநாத்)* - அசேதனமானப்ராக்ருத ஶரீரத்தோடு சேர்ந்திருக்கும் பத்த ஜீவனைக் காட்டிலும், *விஶுத்தாத் சேதநாத் ச* -ப்ராக்ருத ஶரீரத்திலிருந்து விடுபட்டுப் பரிஶுத்தியடைந்த முக்த ஜீவனைக் காட்டிலும், *வ்யாபநாத்* - (அவர்களை) வ்யாபித்திருக்கையாலும், *பரணாத்* - (அவர்களைத்) தாங்குகையாலும், *ஸ்வாம்யாத்* - (அவர்களை) உடையவனாயிருக்கையாலும், *அந்ய:* - வேறுபட்டவனான, *புருஷோத்தம:* - புருஷோத்தமனான ஶ்ரீமந்

நாராயணன், *பஞ்சதஶோதித:* - பதினைந்தாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டான்.

### 16 - தேவாசுரஸம்பத் விபாக யோகம்:

20) தேவாஸுரவிபாகோக்திபூர்விகா ஶாஸ்த்ரவஶ்யதா
தத்வாநுஷ்டாநவிஜ்ஞாநஸ்தேம்நே ஷோடஶ உச்யதே

*தத்வாநுஷ்டாநவிஜ்ஞாநஸ்தேம்நே* - (அடையத்தக்க) தத்துவத்தையும், (அதை அடைவிக்கும்) உபாயாநுஷ்டாநத்தையும் பற்றிய அறிவை உறுதிப்படுத்துவதற்காக, *தேவாஸுர விபாக உக்திபூர்விகா* - (மனிதர்க்குள்) தேவப்பிரிவு, அஸுரப்பிரிவு என்னும் இரு பிரிவுகள் இருப்பதை முன்னிட்டுக்கொண்டு, *ஶாஸ்த்ரவஶ்யதா* - (மனிதன்) சாஸ்த்ரத்திற்கு வசப்பட்டவன் எனும் உண்மை, *ஷோடஶே* - (கீதையின்) பதினாறும் அத்தியாயத்தில், *உச்யதே* - சொல்லப்படுகிறது.

### 17 - ஶ்ரத்தாத்ரய விபாக யோகம்:

21) அஶாஸ்த்ரமாஸுரம்க்ருத்ஸ்நம் ஶாஸ்த்ரீயம் குணத:ப்ருதக்
லக்ஷணம் ஶாஸ்த்ரஸித்தஸ்யத்ரிதா ஸப்ததஶோதிதம்

*க்ருத்ஸ்நம் அஶாஸ்த்ரம்* - ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத கர்மம் அனைத்தும், *ஆஸுரம்* - அஸுரர்க்குரியது (ஆகையாலே பயனற்றது என்றும்), *ஶாஸ்த்ரீயம்* - சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மம், *குணத:* - (ஸத்வரஜஸ்தமோ) குணங்கள் மூன்றையிட்டு, *ப்ருதக்* - மூன்று விதமாயிருப்பது என்றும், *ஶாஸ்த்ரஸித்தஸ்ய* - சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட யாகம் முதலான் கர்மங்களுக்கு, *த்ரிதா லக்ஷணம்* - "ஓம் தத் ஸத்" என்னும் மூன்று பதங்கள் (தாம் சேர்வதன் மூலம் அவற்றை மற்ற கர்மங்களினின்றும் வேறுபடுத்தும்) லக்ஷணமாகின்றன (என்னும் விஷயமும்), *ஸப்ததஶோதிதம்* - பதினேழாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது.

### 18 - மோக்ஷோபதேச யோகம்:

22) ஈஶ்வரே கர்த்ருதாபுத்திஸ்ஸத்வோபாதேயதாந்திமே
ஸ்வகர்மபரிணமஶ்ச ஶாஸ்த்ரஸாரார்த்த உச்யதே

*ஈஶ்வரே கர்த்ருதாபுத்தி:* - கர்மங்களைச் செய்பவன் ஈஶ்வரனே என்னும் நினைவும், *ஸத்வ உபாதேயதா* - ஸத்வ குணம் கைக்கொள்ளத்தக்கது என்னும் விஷயமும், *ஸ்வ கர்மபரிணம:* - (முற்கூறிய நினைவுடன் அநுஷ்டிக்கப்படும்) ஸாத்விக கர்மத்தின் பலன் முக்தி என்பதும், *ஶாஸ்த்ரஸாரார்த்த ச* - இந்த கீதா ஶாஸ்த்ரத்தின் ஸாரார்த்தமான பக்திப்ரபத்திகளும், *அந்திமே* -

கீதையின் கடைசியான பதினெட்டாம் அத்தியாயத்தில், *உச்யதே* - சொல்லப்படுகிறது.

23) கர்மயோகஸ்தபஸ்தீர்த்ததாநயஜ்ஞாதிஸேவநம்
ஜ்ஞாநயோகோ ஜிதஸ்வாந்தை: பரிஶுத்தாத்மநிஸ்திதி:

*கர்மயோக:* - கர்மயோகமாவது, *தபஸ் தீர்த்த தாந யஜ்ஞாதி ஸேவநம்* - தவம், தீர்த்தயாத்திரை, தானம், யஜ்ஞம் (யாகம்) முதலானவற்றில் இடைவிடாது ஈடுபடுதலேயாகும். *ஜ்ஞாநயோக:* -ஜ்ஞாநயோகமாவது, *ஜிதஸ்வாந்தை:* - தனது மனத்தை வென்றவர்களால், *பரிஶுத்தாத்மநிஸ்திதி:* - ஶரீரத்தோடு தொடர்பற்ற தம் ஆத்மாவில் (இடைவிடாமல் சிந்திப்பதன் மூலம்) நிலைநிற்றலேயாகும்.

24) பக்தியோக: பரைகாந்தப்ரீத்யாத்யாநாதிஷுஸ்திதி:
த்ரயாணுமபி யோகாநாம்த்ரிபி: அந்யோந்ய ஸங்கம:

*பக்தியோக:* - பக்தியோகமாவது, *பரைகாந்தப்ரீத்யா* - பரமாத்மாவான ஸ்ரீமந்நாராயணனிடமே செலுத்தப்பட்ட அன்போடு கூட, *த்யாநாதிஷுஸ்திதி:* - தியானித்தல், அர்ச்சனம் செய்தல், வணங்குதல் முதலானவற்றில் நிலைநிற்றலேயாகும். *த்ரயாணுமபி யோகாநாம்* - கர்மம், ஜ்ஞாநம், பக்தி எனப்படும் மூன்று யோகங்களில், *த்ரிபி: அந்யோந்ய ஸங்கம:* - ஒவ்வொரு யோகத்திலும் மற்ற இரண்டும் சேர்ந்திருக்கின்றன.

25) நித்யநைமித்திகாநாம் ச பராராதந ரூபிணும்
ஆத்மத்ருஷ்டேஸ்த்ரயோப்யேதே யோகத்வாரேண ஸாதகா:

*பராராதந ரூபிணும்* - பரமபுருஷனுக்கு ஆராதனமாயிருக்கும், *நித்யநைமித்திகாநாம் ச* - நித்ய நைமித்திக கர்மங்களுக்கும், (த்ரிபி: ஸங்கம: - மூன்று யோகங்களிலும் சேர்த்தியுண்டு), *ஏதேத்ரய: அபி* - இந்த மூன்று யோகங்களும், *யோகத்வாரேண* - (மனம் ஒருமுகப்பட்டிருக்கையாகிற) ஸமாதி நிலையை விளைப்பதன் மூலம், *ஆத்மத்ருஷ்டே* - ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு, *ஸாதகா:* - உபாயங்களாகின்றன.

26) நிரஸ்த நிகிலாஜ்ஞாநோத்ருஷ்ட்வாத்மாநம் பராநுகம்
ப்ரதிலப்ய பராம் பக்திம் தயைவாப்நோதி தத்பதம்

*நிரஸ்த நிகில அஜ்ஞாந:* - (உபாயத்திற்குத் தடையான) எல்லா அஜ்ஞானங்களும் நீங்கப் பெற்றவனுய், *பராநுகம்* - பரம புருஷனுக்கு அடிமைப்பட்டிருக்கும், *ஆத்மாநம்* - தன்ஸ்வரூபத்தை, *த்ருஷ்ட்வா* - கண்டு

(அதன் விளைவாக), *பராம் பக்திம்* - பரபக்தியை, *ப்ரதிலப்ய* - அடைந்து, *தயா ஏவ* - அந்த மேலான பக்தியாலேயே, *தத் பதம்* - அந்த எம்பெருமானுடைய திருவடிகளை, *ஆப்நோதி* - அடைகிறுன்.

27) பக்தியோகஸ் ததர்த்தீசேத் ஸமக்ரைஶ்வர்ய ஸாதக:
ஆத்மார்த்தீசேத்த்ரயோப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாதகா:

*பக்தியோக:* - பக்தியோகமானது, *ததர்த்தீசேத்* - மிகச்சிறந்த செல்வத்தை விரும்பினவனுகில், *ஸமக்ரைஶ்வர்ய ஸாதக:* - மிகச் சிறந்த செல்வத்தையளிக்கும். *ஏதேத்ரய: அபி* - இந்த மூன்று யோகங்களுமே, *ஆத்மார்த்தீசேத்* - ஆத்மஸ்வரூபத்தை அநுபவிக்க விரும்பினுனுகில், *தத்கைவல்யஸ்ய ஸாதகா*: - ஆத்மமாத்ர அநுபவத்தை அளிக்கக் கூடியவை.

28) ஐகாந்த்யம் பகவத்யேஷாம் ஸமாநமதிகாரிணும்
யாவத்ப்ராப்தி பரார்த்தீசேத் ததேவாத்யந்தமஶ்நுதே

*ஏஷாம் அதிகாரிணும்* - இந்த மூன்று வகைப்பட்ட அதிகாரிகளுக்கும், *பகவதி* - எம்பெருமானிடம், *ஐகாந்த்யம்* - மற்ற தெய்வங்களைத் தொழாமல் அவன் ஒருவனையே தொழுமவர்களாயிருக்கும் பக்தி, *ஸமாநம்* - பொதுவானது; *யாவத்ப்ராப்தி* - பலனை அடைவதற்குள், *பரார்த்தீசேத்* - (ஐஶ்வர்யார்த்தியும், கைவல்யார்த்தியும்) பரமப்ராப்யமான பரமபுருஷனின் திருவடிகளை அடைய விரும்பினுனுகில், *தத் ஏவ* - அந்தத் திருவடியையே, *அத்யந்தம்* - எப்போதும், *அஶ்நுதே* - அடைகிறுன். (உபாஸகஜ்ஞானி பலனை அடையும் வரையில் எம்பெருமானையே விரும்பினுனுகில், அவன் திருவடியையே என்றும் அடைகிறுன்.)

29) ஜ்ஞாநீ து பரமைகாந்தீ ததாயத்தாத்ம ஜீவந:
தத்ஸம்ஶ்லேஷ வியோகைக ஸுகது:க்கஸ்ததேகதீ:

*பரமைகாந்தீஜ்ஞாநீ து* - பரமைகாந்தியானஜ்ஞாநியோவெனில், *ததாயத்தாத்ம ஜீவந:* - எம்பெருமானையே பற்றி நிற்கும் தன் வாழ்வையுடையவனுய், *தத்ஸம்ஶ்லேஷ வியோகைக ஸுகது:க்க:* - அந்த எம்பெருமானேடு சேர்ந்தால் இன்பத்தையும், அவனைப் பிரிந்தால் துன்பத்தையும் அடைபவனுய், *ததேகதீ:* - அவன் ஒருவனிடமே தன் அறிவை வைத்தவனுய் இருப்பவன்.

30) பகவத்த்யாந யோகோக்தி வந்தநஸ்துதிகீர்த்தநை:
லப்தாத்மா தத்கதப்ராண மநோபுத்தீந்த்ரியக்ரிய:

*பகவத்த்யாந யோக உக்தி வந்தந ஸ்துதி கீர்த்தநை:* - எம்பெருமானைத் தியானிப்பது, காண்பது, அவனைப் பற்றிப் பேசுவது, அவனை வணங்குவது, துதிப்பது, திருநாம ஸங்கீர்த்தனம் செய்வது ஆகியவற்றால், *லப்தாத்மா தத்கதப்ராண மநோபுத்தி இந்த்ரியக்ரிய:* - எம்பெருமானிடம் ஈடுபட்ட ப்ராணன், மனம், புத்தி, இந்த்ரியங்கள் ஆகியவற்றின் செயல்களை உடையவன்.

31) நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத்ப்ரீத்யைவ காரித:
உபாயதாம் பரித்யஜ்யந்யஸ்யேத் தேவே து தாமபீ:

*நிஜகர்மாதி* - தனது வர்ணாச்ரமங்களுக்குரிய கர்மம் தொடக்கமாக, *பக்த்யந்தம்* - பக்தி ஈறாகவுள்ள அனைத்தையும், *உபாயதாம் பரித்யஜ்ய* - இவை 'உபாயம்' என்னும் எண்ணத்தைக் கைவிட்டு, *ப்ரீத்யா ஏவ காரித:* - (வகுத்தஸ்வாமியைப் பற்றியவை என்னும்) அன்பாலே தூண்டப்பட்டவனாய், *குர்யாத்* - (பரமைகாந்தியானஜ்ஞாநி) செய்யக்கடவன்; *அபீ:* - பயமற்றவனாய், *தாம்* - அந்த உபாயத்வத்தை, *தேவே து* - எம்பெருமானிடமே, *ந்யஸ்யேத்* - அநுஸந்திக்க வேண்டும்.

32) ஏகாத்யாத்யந்த தாஸ்யைக ரதிஸ் தத்பதமாப்நுயாத்
தத்ப்ரதாநமிதம் ஶாஸ்த்ரமிதி கீதார்த்த ஸங்க்ரஹ:

*ஏகாத்யாத்யந்த தாஸ்யைக ரதி* - எம்பெருமானுடைய முகமலர்த்தியையே பயனாகக் கொண்டதாய், எல்லாக் காலத்திலும் செய்யப்படுவதான அடிமையையே விரும்புகின்ற பரமைகாந்தி, *தத்பதம்* - (அவ்வடிமைக்குறுப்பாக) எம்பெருமானுடைய திருவடிகளை, *ஆப்நுயாத்* - அடைவான்; *இதம் ஶாஸ்த்ரம்* - இந்த கீதா ஶாஸ்த்ரம், *தத்ப்ரதாநம்* - சேதனனைப் பரமைகாந்தியாக்குவதை முக்கியமான குறிக்கோளாகக் கொண்டது. *இதி* - இவ்வண்ணமாக, *கீதார்த்த ஸங்க்ரஹ:* - கீதையின் பொருளை சுருக்கிக் கூறும் 'கீதார்த்த ஸங்க்ரஹம்' என்னும் நூல் நிறைவு பெறுகிறது.